அசத்துடன் சேர்க்கை || உறுதியில்லாததற்குக் காரணம்,
கவனமில்லாத கேழ்விக்குக் காரணம்; ஸந்தேஹமென்னும் ப்ர
திரம், மனம் கெடுபடாத ஜபம், வாஞ்சாபக்தியில்லாததே
சம், வேதாத்யயனம் முதலான யோக்யதையில்லாத ப்ரா
ராமணனை வைத்துச் செய்யும் ச்ராத்தம்; அத்யயனம்
ஆசாரமில்லாதவனுக்குச் செய்யும் தானம்; ஆசாரமி
ல்லாத கிலம், இவைகள் பலனில்லாதவை உபயோகம
ற்றவை || ஸகலசாஸ்திராப்யாஸம், ஸ்வதர்மானுஷ்
டானம் இவைகளால் ஞானம் அடையும் பலன்
மரணகாலத்தில் நாராயண ஸ்மரணம்-இதுதான் மே
லான லாபம் || உலகவிஷயங்களில் ஆசையில்லாத
வனும், உலகவிஷயங்கள் வேண்டும் என்று விரும்பு
பவனும், அல்லது மோக்ஷமே வேண்டும் என்று விரும்பு
பவனும் பகவானிடம் பரபக்தி செய்யவேண்டும்.
மனிதனுக்கு இஹலோகவிஷயப்பற்றுள்ள மனமே ஸம்ஸாரப்ர
வ்ருத்திக்குக் காரணம்; அதைவிட்டு பகவானிடம் பக்தியு
மான பற்றுள்ள அதே மனம் மோக்ஷத்திற்குக் காரணம் ||
நான் எனது என்ற அபிமானம், ராஜஸமான காமக்ரோத

+ தெளிவல்லாத

லோபமுள்ளவனாய் தார்க்கிகனாய்ப் போற்றிக் கிடந்து
த்மாகி விஷய ஸம்பந்தமான ஸுகமோ துக்கமோ
இல்லாமல் மனதை ஸமாதியில் நிறுத்தி ஸர்வா
த்மாவான பகவானிடம் பக்தி செய்வதே மிகும்
மகோபராப்தியான மோக்ஷத்தையடைய மு
முக்ஷுவார்க்கு நல்ல மார்க்கம், இதற்கு இதுவாக
வேறு வழி கிடையாது॥ உலகப்பற்றறுதலுக்குப்
பெரிய கட்டு, அந்தப்பற்றை ஸாதுக்களிடம் வைத்தால்
மோக்ஷத்திற்கு வழி என்று அறிவாளிகள் கூறுகிறார்கள்॥
பொறுமை, கருணை, ஸர்வ பிராணிகளுக்கும் நன்
மை செய்தல், தனக்கு சத்ருவின்மை, சாந்தி இவ
ற்றைக் கொண்டவர்கள் ஸாதுக்களுக்குள் மே
லானவர்கள்॥ இந்த ஸாதுக்களெல்லாம் பற்றில்
லாதவர்கள் கெட்டவர்களின் சேர்க்கையால் உ
ண்டான கெடுதல்களை நீக்குவார்கள். அவ்வித ஸா
துக்களுடைய சேர்க்கை வேண்டத்தக்கது॥
பலனைக் கொடாத பக்தி ஞானத்தைக் கொடுக்கும்
மேலானது, அது மறுபடிப் பிறவாமல் செய்துவிடும்॥

உலகம் உண்மையில் இல்லாதது தான் மாயையால்
இருக்கிறது

தோன்றுமே, மாயை என்ற அக்ஞானம் நீங்கும் வரை
யில் துக்கத்தைக் கொடுக்கவே செய்யும், ஸ்வப்ன
த்தில் ஏற்படும் பயம் விழிக்கும் வரை இருப்பது போல்.
பகவானிடம் பக்தி செய்தவன் பகவானுடைய ப்ரஸா
தத்தால் ஞானத்தை அடைந்து ஸகல ஸம்சயங்க
ளும் நீங்கி மோக்ஷத்தை அடைவான். பரமாத்மாவா
ன பகவான் ஸர்வ ப்ராணிகளுடைய ஹ்ருதயத்திலும்
நம்முடைய ஹ்ருதயத்திலும் இருக்கிறார். அவரே
வரை எங்கும் உள்ளவர் என்று வேதாந்த ஞானம்
வரும் வரை மனுஷ்யன் தனக்குரிய வர்ணாசிர
மதர்மங்களைச் செய்து கொண்டு விக்ரஹாராதனையி
ல் பகவானை ஆராதிக்க வேண்டும்.
நரகத்தில் இருக்கும் கஷ்டமான சரீரத்துடன் இருப்பவ
னும் அந்த சரீர மரணத்தால் அதை விட்டுவிட விரு
ம்பமாட்டான், மாயையால் உண்டான மோஹமே அதற்
க்குக் காரணம். இந்த பூலோகத்தில் அனுபவிக்கும் து
க்கங்களை நரக துக்கம் இங்கே அனுபவிக்கும்

வேறு மனிதனைப் பார்க்காமல் ஒரே மனிதனை
ப் பார்ப்பது போல், ஒன்று சரீரக் கருணையபராதத்
மா ஒகலரென்று அறிவார்கள்॥ அவ்வித
~~[illegible]~~ அபேதபுத்தியுள்ளவர்களை
சாந்தியுடனிருப்பார்கள்॥ ஒருவரால் நமக்கு
க்ஷ்டம் நேர்ந்தபோது அவரிடம் கோபங்கொள்
ளாது ஸரியில்லை, நாம் முன்பு (முன்ஜன்மத்தில்) ஒரு
வருக்குச் செய்ததைத் தேகிப்போது ஒருவரால்
ம் அனுபவிக்கப்படுகிறது என்று அறிந்து இனியா
வது அவ்வித பாவத்தைச் செய்யாமலிருக்க வேண்
டும், செய்த பாவம் நீங்க மனதை அடக்கி பகவா
ன்தியானம் செய்து ஆராதிக்கவேண்டும் துக்க
த்தை நிவர்த்தி செய்துகொள்ள வேறு உபாயமி
ல்லையாது॥ ஒருவன் தான் ஸுகத்தை அனுபவிக்கும்போ
து முன்செய்த புண்ணியபலனை அனுபவிக்கிறேன் என்றும், துக்கத்
தை அனுபவிக்கும்போது முன் செய்த பாபம் நீங்குகிறது என்று
ம் அறிந்து ஸந்தோஷமாக வேயிருப்பவன் க்ஞானியாவான்॥
தன்னைக்காட்டிலும் கீழ்களானவோ பணம்படைத்தவரோ

மேலான வினைக்கான்கு பொறுமைப்படாமல்ல.

ஸந்தோஷப்படவேண்டும்; மேன்மையானவர்களில் தாழ்
ந்தவனிடம் கருணை காட்டவேண்டும் அவமதிக்கக் கூ
டாது, ஸமமானவனிடம் நட்புக்கொள்ள
வேண்டும் அஸூயை கூடாது (இவ்விதமிருந்தால் ஸா
ந்தியேற்படும்) எல்லோரிடமும் நட்புகொள்ளுதலான
நற்குணங்களிருப்பவனுக்கு பகவானுடைய ப்ரஸாத
மேற்படும், அதனால் அடக்கமுள்ள அவனுக்கு எல்லோ
ரும் மரியாதை செய்வார்கள் - பார்த்தனோக்கிருவம்
ஞ்சுவது போல். எந்த அரசனுடைய ராஜ்யத்தில் ஜ
னங்கள் தங்களுடைய வர்ணாச்ரமதர்மங்களால் எக்
புருஷனா பகவானை ஆராதிக்கிறார்களோ அந்த அ
ரசனிடம், "தவன்றம்முடைய தர்மவதியை அனுஸரித்து
நடக்கிறான்" என்று பகவான் ஸந்தோஷமடைகிறார்.
புத்தமதம் ஜைனமதம் போன்ற மதங்கள் தமதுடைய
வேதசாஸ்திரங்களுக்கு விரோதமானவைகள், அவர்களுடைய
இசைப்புஸ்திரம், கர்வமும் தேவலான வேறுக்கொடா
கொண்டம் (பாஷண்டம்) பாபத்தின் அடையாளமென

ஆம் உபதர்மம் (தர்மம் போலத் தோன்றுவது)

என்றும் அநித்ய விவேகமில்லாதவன் அவர்களுடைய அநா
தியமான மதவாத சாரத்தில் மயங்கக்கூடாது. புறமத
பாரதீய வேத சாஸ்திரங்களுக்கு விரோதமான மதங்கள் நாஸ்
திகமதங்கள் அவைகளை அனுசரித்தால் நமக்கு க்ஷேமம்
கிடையாது॥ எந்த அரசன் தன் பிரஜைகளை தர்மவழி
யால் நடத்தாமல் அவர்களிடம் வரித் தீர்வை வாங்குகிறா
னோ அந்த அரசன் தான் செய்த புண்யங்களையும் இழந்து
பிரஜைகள் செய்யும் பாபங்களை அடைகிறான்॥ ஸாதுக்களுக்
கின்னல் விளைக்கிறவர் ஸத்திப்பது கொலைக்கொடுந்தன்
மை, துரோகமும் அவர்களுடைய ஸம்பாதனை மற்றவர்க
ளுக்கும் நாசத்தையே கொடுக்கும்॥ இந்திரியங்களையு
ம் மனதையும் அடக்காதவன் வனத்தில் இருந்தாலும் அவ
னுக்கு பயம் தான் சாந்தி கிடைக்காது, அவைகளை அடக்கி
ஆத்ம விசாரம் செய்பவன் கிருஹத்திலிருந்தாலும் அவனுக்கு
பயமில்லை சாந்தி கிடைக்கும்॥ பெரியோர்களுடைய ஸத்ஸங்கம்
முக்திக்கு வழிகாட்டும், ஸ்திரீ முதலான உலகவிஷய
ஆசையுள்ளவர்களின் சேர்க்கை ஸம்ஸார பந்தத்தைக்

தொடுக்கும் மன்னர்களான பெரியோர்கள், ஸ
மபுத்தி, சாந்தி, கோபமின்மை, எல்லோரிடத்திலினி
மை செய்தல் முதலான நற்குணங்களுடையவர்கள்.
பகவானுடைய அவதாரமான ரிஷப தேவனுடைய புத்
ரர் ஜடபரதர் என்ற புகழ்மிக்க ஞானி அரசாட்சி செ
ய்ய ஆரம்பமானபிறகுதான். முன்பு அஜநாபம் என்
ற பெயரில் இருந்த இந்த தேசம் பாரத தேசம் என்
று பெயர் பெற்றது. (பாகவதம் ஐந்தாவது ஸ்கந்தம்.)
மனிதர்களுக்குக் கைதொழில் செய்து அவர்கள் போ
ஷித்துக்கொண்டு இருந்தாலும் செய்தவினை அழித்துவரு
கும். இந்த பாரததேசம்தான் கர்மக்ஷேத்ரம் என்பது
இங்குதான் வர்ணாச்ரம தர்மங்கள் உண்டு, மற்ற இ
டங்கள் போகபூமிகள், சாந்தி முதலான ஸாதா
ரண தர்மங்கள் எங்கும் உண்டு, மற்ற இடங்களிலும்
வைதிக தர்மங்களைச் செய்தால் நல்லதே.
பாரத தேசத்தில் பிறந்தவர்கள் புண்யம் செய்தவர்கள்,
பகவானுடைய அநுக்ரஹத்தைப் பெற்றவர்கள் ஏனெனில்
இங்குதான் பகவானைக் குறித்து பலவிதத்தில் பக்தி

செய்ய வேண்டும். ஆகையால் நாங்களும் பாரததேசத்
தில் பிறக்க விரும்புகிறோம் என்று தேவர்கள் கூறுகி
றார்கள்॥ பெருத்தல் இளைத்தல் வியாதிகள் கவலைகள்
பசி தாகங்கள் பயம் கலகம் ஆசை மெய்ப்பு தூக்கம்
ஸந்தோஷம் கோபம் துக்கம் கர்வம், பிறரை அவ
மதித்தல் முதலான தர்மங்கள் சரீர அபிமானமு
ள்ள அக்ஞானிகளுக்கே தவிர ஞானிக்கில்லை॥
புண்யங்களைச் செய்து பாபங்கள் ஒவ்வொன்றையும் நீ
க்கிக் கொள்ள முடியாது, கர்மானைச் செய்பவன் அஞ்
ஞானியானதால் திரும்பவும் பாபத்தில் ஈடுபடுகிறவ
னாம், ஆத்மக்ஞானம் ஒன்றினாலேயே பாபம் நி
வர்த்தியாகிறது॥ வியாதியுள்ளவன் ஔஷதம் சா
ப்பிடுவதுடன் பத்யமும் செய்வது போல் புண்யங்க
ளையே செய்து கொண்டும் பாபங்களைச் செய்யாமலும்
இருந்தால் நாளடைவில் மனசுத்தியால் ஞானம்
ஏற்பட்டு பாபம் நிவர்த்தியாகிறது॥ கர்மத்தை
நதீஜலம் சுத்தம் செய்யாது, அதுபோல் பக்தியின்றிச் செய்
யும் பிராயச்சித்த கர்மாக்கள் பாபத்தை நீக்காது॥

புத்ரனதிகளின் பெயராக இருந்தாலும், பரிஹாஸத்திற்
க்காகச் சொன்னாலும், ராக ஆலாபனை வேலாவனை
யால் ஸ்வபாவமாகச் சொன்னாலும், நிந்தை செய்வதற்
க்காகச் சொன்னாலும் நாராயணா, ராமகிருஷ்ணா இவ
என்று அர்த்தம் தெரியாமல் பெயரளவில் சொன்
னாலும் ஸகல பாபங்களும் நீங்கும்॥ கீழே விழுந்
தோ, தடுக்கியோ, இடித்தோ, பிராணிகள் கடித்
தோ, பொசுக்கியோ, அடித்தோ, எந்த நிலைமையி
லேனும் தன்னை அறியாமல் பகவானுடைய நாம
த்தைச் சொன்னாலும் பாபம் நீங்கும் நரகத்தை
யடையமாட்டான்॥ பாபங்களில் பெரியது சிறிய
து என்று உண்டு, அதற்குத் தகுந்தபடி ப்ராய
ச்சித்தங்களும் சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளன,
அவைகளை அறிந்து தவம் தானம் ஜபம் முதலான
புண்யங்களைச் செய்தால் பாபங்கள் நீங்கும், ஆனால்
மறுபடியும் பாபம் செய்யக் காரணமான வாஸனை
யை (ஸம்ஸ்காரம் கெட்ட அப்யாஸம்) ப்போக்
காது. பாபங்களையும் வாஸனைகளையும் பகவா

ஞானையைப் பக்தியென்றே போக்கும்॥ உயர்ந்தவனா
தும் அறியாமல் ஏதிர்ச்சையாகத் தப்பட்டாலும் அத
ன் பலனைக் கொடுக்கும், ஔஷதத்தின் அதன் தத்வம்
தெரியாமல் ஜபம் செய்தாலும் பலனைக் கொடுக்கும் அது
போல் பகவானுடைய நாமாவும் பொருள் தெரிந்தோ
தெரியாமலோ எந்தவாக்கில் சொன்னாலும் பாபங்களை
ப் போக்கும், ஸ்ரீமதும் பகவானுடைய நாமம் என்று தெ
ரியாமலோ தெரிந்தோ சொன்னாலும் நெருப்பானது க
ட்டையை எரிப்பது போல் பாபங்களைப் போக்கிவிடும்॥
தன்னுடைய காரியம் நிறைவேற வேண்டுமென்று
நினைக்கின்றவன் பிறருடைய கஷ்டத்தைக் கவ
னிக்கமாட்டான்। பணம் ஸம்பாதிப்பதிலாசையுள்ள மா
னத்தை அறிந்தவன் பிறரிடம் யாசிக்கமாட்டான், வெ
ட்கத்தைவிட்டு கேணிக்கிகிறுமைத்தால் யாசிப்பவ
னுடைய கஷ்டத்தை அறிந்தவன் சக்தியிருந்தால்
இல்லையென்று சொல்லமாட்டான்॥ ஸத்வகுணமேதோ
குணத்தோர் கொள்கைப்பாக்கிதி பரிசுத்தமான மனது
தில் பிரார்த்தனை ஆத்மாவுக்கு கொள்கைகளில்லை,

ஆத்மா அவைகளுக்கு ஸாக்ஷிமாத்திரமாகவுள்
ளது । இவ்வாறு மனிதனுக்கு ஸம்ஸார பந்தமி
ல்லை ॥ அஞ்ஞான வாயு வேகத்தால் மேகங்கள்
கூடுவதும் பிரிவதும் எவ்வாறோ, அவ்வாறே இந்
திரிய பொறிகள் ஒன்றோடொன்று கூடிப்பி
ரிவது போலும் பிராணிகள் மாயைக்குக் கட்
டுப்பட்டு கர்மாக்களைச் செய்து கர்மாக்களின்
பலனுக்கேற்றபடி இச்சரீர பிராணிகளைச்
சேர்த்தும் பிரித்தும் வைக்கிறது, இது இந்திர
ஜாலவிளையாட்டம் போல் இச்சரீரமென்பதில் ॥
ஒரு தேகத்திலிருந்து மறு தேகம் உண்டா
கிறது வாசனை பலவிருந்து மேம் ஜத்திரங்கள்
வரை என்பது போல, தேகாபிமானத்திலுள்
ளபடியது இல்லை, தேகம் நிலையில்லாதது போ
ல் ஒருபொழுதேனும் பொய்யல்லாதுக்கள்
பூமிமாதும் எல்லாம் நிலையில்லாதவைகளே,
இவைகள் எல்லாம் சோகம் மோஹம் பயம்
இவைகளுக்குக் காரணமானவை । ஆகையத்தில்

பார்த்தானலனேயவானவ தேவனுக்குயாவத் சுச்
ருஷை (பணிவிடை) செய்து நற்கதியடைகிறார்கள்.
ஒருவனுக்கு பதிவிரதையான பத்தினியாலேயே கிரு
ஹஸ்தாசிரமமே உத்தமமாக அமைகிறது, அவ்வா
று மனைவியாலேயே தர்மம் அர்த்தம் காமம் என்
ற புருஷார்த்தங்கள் கிடைக்கின்றன. ஆகையால்
அவள், புருஷன், ஸந்தோஷமாக இருக்கும்படி
நடக்க வேண்டும். அனுகூலமான பத்தினியாலேயே
புருஷன் இவ்வுலகமான ஸம்ஸாரஸமுத்திரத்தை ஸுல
பமாகத் தாண்டுகிறான். வேதமும் பத்தினியை புரு
ஷனுடைய சரீரத்தில் பாதி என்று கூறுகிறது, ஸம்
ஸாரபாரத்தை மனைவியுடன் பகுத்துக்கொண்டு புரு
ஷன் கவலையற்றிருக்கிறான், மற்றுஞ்சிலரே
ன் இந்திரியங்களை ஜயிக்க கஷ்டமானதுப
ஸ்வபமாதி யோக ஸாதனைகளைச் செய்கிறார்
கள், கிருஹஸ்தாசிரமத்திலிருப்பவன் அனுகூலமான
பத்தினியால் ஸுலபமாக இந்திரியங்களை ஜயித்துவிடு
கிறான், இவ்வாறு உத்தமஸ்திரீகளுக்கு புருஷனால் மதிப்பு

தோஷங்கள் கிடையாது, மழை பெய்வதெல்லோ
ருக்கும் ஸமமானதுபோல் நல்வினைசெய்தவனுக்கும்
தீய வினைசெய்தவனுக்கும் ஒன்றுபோல் பெய்வதால்
மழைக்குக் கொடுக்கும் தோஷ வைஷம்யமில்லாதது போல் என்று
அறியவும்॥ பக்தி என்பது, பகவானை இடைவிடாது
மனதில் நினைத்துக்கொண்டிருப்பது, அவ்வாறு நினைவு
பகவானிடமுள்ள ப்ரேமையுத்தியாலேயோ, அதின்றியோ, பய
த்தாலேயோ, ஸ்நேஹம், காமம், இவைகளில் எதனாலாவ
தினாலேயாவது பகவானை இடைவிடாது நினைக்கலாம்,
அதனால் அவனுடைய அனுக்ரஹத்தைப் பெறலாம்; ஸாதார
ண மானிடனுக்கு, (இவனு) அவன் ஸ்துதி (நிந்தை) செய்தாலும், உப
சரித்தாலும் ஸந்தோஷமடைகிறான், அதுபோல் எவன்
தன்னை தூஷித்தாலும் அவமரியாதை செய்தாலும் அவ
ன்மேல் கோபமடைகிறான் அதற்குக்காரணம்
மனிதனுக்கு சரீரத்தில் தான் என்ற அபிமானம் இ
ருப்பதுதான் காரணம், பகவானுக்கோ தன்னுடைய
மாயா சரீரத்தில் அபிமானம் கிடையாது அதனால் த
ன்னை நினைப்பவர்கள் யாராயினும் தன்னிடமே பக்தி

17

பாவனையால் அவர்களுக்கெல்லாம் முக்தியளி
க்கிறார். உதாரணமாக — கோபிகைகள் பகவா
னிடம் காமத்தாலும், கம்ஸன் பயத்தாலும், சிசுபா
லன் பௌண்ட்ரக வாஸுதேவன் முதலானோர் த்வே
ஷத்தாலும், யாதவர்கள் ஜ்ஞாதி ஸம்பந்
தத்தாலும், பாண்டவர்கள் ஸ்நேஹத்தாலும், நா
ரதர் முதலானோர் பக்தியாலும் முக்தியடைந்தா
ர்கள். எவ்விதத்திலாவது இடைவிடாது பகவச்சிந்த
னையே பக்தி அதுதான் முக்திக்கு வழி.

ஸம்ஸாரத்தில் பத்னி புத்ராதிகளையே கூட்டிச் சேர்க்
கை அவரவர்களுடைய கர்மாக்களின் அனுஸரி
த்தது, தண்ணீர்ப் பந்தலில் கூடும் கூட்டம் போலிதெ
ல்லாமும் அநித்யமானதே. ஆத்மா என்பது சரீரம்
இந்த்ரியங்கள் மனம் புத்தி ப்ராணன் முதலியவைகளைக்
காட்டிலும் வேறானது. ஆத்மாவால் கிரியை கிடையா
து. மேகம் கிளம்பி ஓடும் போது சந்திரனே ஓடு
வது போல் தோணுகிறது, அது போல தேஹேந்த்ரியங்
களிலிருக்கின்ற க்ரியைகள் ஆத்மாவில் உள்ளது
போல.

போல் தோணுகிறது. அது பரமே॥ ஆத்மா
யுக்தோ ஞானவிஸ் சரீரமோ அழியக்கூடியது எனத்தெரிந்
து மையாக ஆசையால் பேதியானவன் ஜன்மத்தை
க் கண்டு அறிந்துகொண்டான்॥ அக்ஞானத்தால் சரீ
ரத்தையே ஆத்மாவாக நினைத்து அதனால் ஏற்படும்
பயத்தை ஜன்ம ம்ருத்யுவென்னும் உலகப்பற்றுத
ட்டு தனிமையாக நிற்பதும் துக்கங்களை அடைவதா
ல் பயம் நீங்கும்॥ பூர்வ ஜன்ம பாவங்களால் பகவானி
டம் பக்தி ஒன்பது, ச்ரவணம், கீர்த்தனம், ஸ்மரண
ம், பாதசேவை, அர்ச்சித்தல், நமஸ்காரம், ஸமர்ப்
பணம், ஸக்யம், ஆன்ம நிவேத அர்ப்பணம் செய்தல் என்
று ஒன்பதால் பக்தி செய்வதே. உயர்ந்த அறிவு॥
விவேகமுள்ளவன், மனிதஜன்மம் புண்யத்தால் கிடை
த்திருக்கிறது, நிலையில்லாதது ஆகையால் இந்த வயதிலே
யே, பகவானுடைய பக்திக்கான தர்மங்களைச் செய்ய
வேண்டுமென்று நினைத்து ச்செய்து ஜன்மத்தைப்
பயனுள்ளதாகச் செய்துகொள்ள வேண்டும்॥
ஒருதடவையேனும் பக்தியுடன் ஸ்ரீகிருஷ்ணனுடைய பாத

ஹரியை நினைத்தால் ஸர்வ பாபங்களும் நீங்குகிற
தே, நினைப்பவர்கள் எமனுடைய(யோ) பாசக்கயிறுடன் கூ
டிய எமதூதர்களை யோஸ்வப்னத்திலும் பார்க்கமா
ட்டார்கள்॥ பகவானுடைய ப்ரஸாதத்தையடை
ய, பணம், உயர்குலம், அழகு, தபஸ், படிப்பு - சாஸ்திரப
ஸாஸம், இந்திரியபலம், ஐஸ்வர்யத்னம், நல்ல அறிவு, யோ
கம் தேவையில்லை, பக்தியிருந்தால் போதும், மே
ஹரிய குணங்கள் இல்லாத கஜேந்திரனுக்கு ப
கவான் அனுக்ரஹம் செய்ததால் இதை அறிகிறோம்॥
ஸகலதனம் குலம் முதலான ஸம்பத்துக்களும் இருந்
து பகவானிடம் பக்தியில்லாத கொர்வ(?) ப்ராமண
னைக்காட்டிலும், தன்னுடைய சரீரம் மனம் இந்திரி
யங்கள் ப்ராணன் செயல் எல்லாவற்றையும் பக
வானுக்கு அர்ப்பணம் செய்த நாயாடி (நாய்மாம்
ஸம் சாப்பிடுபவன்) மேலானவன், இவன் தன்னை
யும் தன் குலத்தையும் பரிசுத்தம் செய்தவனாகிறான்॥
மேற்கூறிய ப்ராமணன் தன்னையே பரிசுத்தம் செய்துகொ
ள்ளவுங்கூட மாட்டான். இதனால் ஏதே

பகவான் எல்லாவிதத்திலும் ஸம்பூர்ணன், மற்றவரிடமிருந்து ஒன்றையும் எதிர்பார்க்க வேண்டியதில்லை, இருந்தாலும் பக்தர்களை ப்போல் [illegible]னையால் ஏற்றுக்கொள்கிறார். க்ஷேத்திரத்திற்குச் செய்யும் அநுக்ரஹத்தில் அழகை ஸ்ரீ பெற்றதுபோல் பகவானுக்குச் செய்யும் உபசாரங்கள் செய்பவனுக்கே வருகின்றது. பகவானிடம் பலனை எதிர்பார்த்து சேவை செய்பவன் பக்தரில்லை, வியாபாரி, பக்தனுடைய சேவையை அனுஸரித்துப் பலனளிப்பவன் ஸ்வாமியுமில்லை. – பக்தன் நிஷ்காமனாக சேவை செய்ய வேண்டும் (பரமனும்) ஸ்வாமி கருணையால் பலனளிக்க வேண்டும்॥ வழியில் தவறியபோதிலும் நல்ல அதிர்ஷ்டத்தால் காப்பாற்றப்படுகின்றதுபோல், விட்டுவிடினும் நல்ல அதிர்ஷ்டமில்லையேல் மரணமடைகிறது. நல்ல அதிர்ஷ்டத்தால் வனத்தில் அநாதியாக இருந்தவனும் ஜீவிப்பான், அதில்லையேல் வீட்டிலிருந்தாலும் ஜீவிக்கமாட்டான்॥ தினக்கிரியைகளுக்குரிய தர்மங்களைச் செய்து கொண்டேவந்தால் நாளடைவில் சித்தசுத்தி ஸர்வகர்மத்தியாகம் செய்து ஞானியாவான்॥ ஸ்திரீகளுக்குப் பர்த்தாவே முக்ய தெய்வம்,

பர்த்தாவுக்கு அனுகூலமாக இருந்து பணிவிடை செ-
ய்வது, பர்த்தாவானவனுடைய பந்துக்களை அனுசரித்து நடப்ப
து, பர்த்தா செய்யும் தர்மங்களுக்கு உடன் ~~[illegible]~~ இருந்து
தானும் செய்வது, வீடுவாசல் முதலியவைகளை சு
த்தமாக வைத்துக்கொள்வது, இருக்கும் ஆடையாபரண
ங்களால் அலங்காரம் செய்துகொண்டு வீட்டிலில்லா
மலிருப்பது, அடக்கம், வணக்கம் பிரியமாகவும் ஸத்ய
மாகவும் பேசுதல், பர்த்தாவின் குறிப்பறிந்து நடத்தல்,
ஸந்தோஷம், பதட்டமின்மை, வீட்டுக்காரியங்களில் த
ன் செய்யும் ஸாமர்த்தியம், இல்லறதர்ம அறிவு, ஜாக்
கிரதை (கவனம்) சுத்தம், எல்லோரிடமும் நேசம்,
இவ்விதமான குணங்களுடன் பர்த்தாவை ஹரியாகபா
வித்து சேவை செய்து வந்தால் அவள் மரணத்தின்
பின்பு பர்த்தாவுடன் வைகுண்டலோகத்திற்குச்
சென்று அங்கு லக்ஷ்மியும் நாராயணனையும் போ
ல் ஸுகமாக வாஸம் செய்வாள். ஆதலால் பர்த்தாக்கள்
கீழ்சொல்லான மஹாபாபங்களைச் செய்யாதவர்களாகவி
ருந்தால், மஹாபாபியாக இருந்தால் அவளுடைய வலகி

தி பஸ்யத்யை (வேதயத்யை) ஸந்தோஷம், பகவா
னுடைய ஸர்வவிஷயமான வேதத்தைப் படித்து மறக்காம
ல் தாரணை செய்து கொண்டிருக்கும் ப்ராம்மணன்
புவிவர்களுக் கெல்லாஸ்த்யாத்திரம் (ராஜாதிகள் கொடு
த்து உபசரிப்பதற்கு யோக்யனையில்லவன்)॥ (1)
வேதசாஸ்திரங்களுக்கு விரோதமான தர்மம் ஹதர்மம்
எனப்படும், தனக்கின்னுமல் மற்றவர்களுக்கு உரியதர்
(2) மம் பரதர்மமெனப்படும், பௌத்தர் முதலானவர்களு
டையதர்மம் (3) உபதர்மமெனப்படும், (பாபம்) டம்பத்தி
க்காகவோ, அதர்மத்தை தர்மமாக தோற்றமாகப் பொ
ஜிப்பித்துக்கூறிச் செய்யும் சலம் - வஞ்சகமானது)
(4) சலம் எனப்படும், ஆச்ரமத்திற்கு விரோதமாகத்தன்
னிஷ்டப்படி செய்யும் தர்மம், (5) ஆபாஸம் - தர்மாபாஸமெ
னப்படும், இவ்விதமான ஐந்தும் அதர்மத்தின் பிரிவு
கள் (கிளைகள்)॥ ஸ்வதர்மமே சாந்தியளிக்கும்॥
பணமில்லாதவன், தர்மம் செய்ய வோதீர்த்தயாத்தி
ரை முதலானவை செய்யவோதனம் யாசிக்கக்
கூடாது, எவன் மனதை ஸந்தோஷமாக எப்பொழு
தும்

இதைக் கேட்டு பழகிக்கொண்டால் அவனால் கிறி
தாரும் ஸுகமே, காலில் பாதரக்ஷையில்லாதவனால்க
டந்தாலும் மேல்கல் இவைகளால் துன்பம் உண்டாகா
தது போலவே. ஸ்த்ரீஸங்கத்தையும் நாக்கிச்சையையு
ம் அடக்காதவன் நாயைப்போல் அலைகிறான்.
தன் தொழிலால் கிடைப்பதைக் கொண்டு ஸந்தோஷமடை
யாமல் விஷயங்களால் இந்திரியங்களைத் திருப்தி செய்து
கொண்டிருக்கும் ப்ராமணனுடைய ப்ரம்மதேஜஸ்,
வித்யை, தபஸ், கீர்த்தி, இவைகளும் க்ஷீணமே; இறை
ந்து கொண்டே இருக்கும். தனக்கு உபதே
சம் செய்யும் குரு, பகவானுடைய ரூபம், அவரை மனி
தன் என்று நினைத்து அவமதிப்பவன் செய்யும் தர்மங்க
ள் வீண்தான், யானையைக் குளிப்பாட்டி ~~[illegible]~~ புழு
தியாக்கிக்கொள்வது போலவே. க்ருஹஸ்தன், தர்மங்க
ள் செய்யாமல் வாழ்வதும், ப்ரம்மசாரி தனக்குரிய வ்ரதத்
தை விடுவதும், வானப்ரஸ்தன், கிராமத்தில் வாழ்வது
ம், ஸந்யாஸி போகவிஷயங்களால் இந்திரிய த்ருப்தி செ
ய்வதும் கூடாது. இவர்கள் ஆச்ரம த்ரோகிகள்,

க்ஷோரமே ஸம்பந்தம் கிடையாது. ஸம்பந்தமென்னமோ
அக்ஞானத்தாலேயே உண்மையிலில்லை। அவசியமான
தேவைக்கேற்ப பொருள் சேகரிப்பது பாபமில்லை। மன
அடக்கமில்லாமல் அதிக ஆசையுள்ளவனுக்கு மேன்
று போகத்திற்கான பொருள்கள் கிடைத்தாலு
ம் போதுமென்று திருப்தி ஏற்படாது। ஏழு த்வீபங்களுக்
கு அதிபதிகளான அரசர்களும் போதுமென்று திருப்தி
யடையவில்லை என்று சரித்திரங்களால் அறிகிறோம்।
கிடைத்த பொருள்களால் திருப்தியடைபவன் ஸந்தோ
ஷமாகவேயிருப்பான்,। கிடைத்த அர்த்தகாமங்களால்
ஸந்தோஷமடையாதவன் ஸம்ஸாரபந்தத்தில் கட்ட
ப்படுவான்। கிடைத்த பொருளால் ஸந்தோஷம் ஸ
ம்ஸாரமுக்திக்கு வழியாகும்। கிடைத்த பொருளா
ல் ஸந்தோஷமடையும் பாமரனுக்கு ப்ரம்மதே
ஜஸ் வ்ருத்தியடையும், ஸந்தோஷமில்லையேல்
ப்ரம்ம தேஜஸ் லோபமாகும்॥ தன் ஜீவனத்திற்க்கு
க்கேடு வரும்படியான தானம் யோக்யமல்ல। தான் ஜீவி
த்திருந்தால் தான் தானம் எக்கும் குவம், தேவான

புண்ய காரியங்கள் செய்ய வேண்டும். தான் ஸம்பாதிக்கும் பொருளை, தர்மம், கீர்த்தி, அர்த்தம், போகம், பந்துக்கள், என்று ஐந்து பாகம் செய்து அந்த விஷயங்களுக்கு உபயோகிப்பவனுக்கு இவ்வுலகிலும் மறு உலகிலும் ஸந்தோஷம் ஸுகம் கிடைக்கும்॥ ஸ்த்ரீகளைத் திருப்தி செய்வதற்காகவும், விளையாட்டாகவும், விவாஹ விஷயத்திலும், ஜீவனத்திற்காகவும், உயிருக்கு ஆபத்து ஏற்படும் ஸமயத்திலும் பசுக்கள் ப்ராமணர்கள் இவர்களைக் காப்பாற்றவும், இது போன்ற ஸமயங்களில் பொய் சொல்லலாம்॥ மற்ற எல்லாவற்றையும் ஸஹிப்பேன், பாபங்களில் கொடிய பாபம் பொய் சொல்லுதல், ஆகையால் பொய் சொல்லுபவனை என்னால் ஸஹிக்க முடியாது என்று பூமிதேவி கூறினாள்॥ ததீசி முனிவர், சிபி சக்ரவர்த்தி போன்ற பெரியோர்கள் பரோபகாரஞ் செய்ய அந்தணன் ப்ராணனையே கொடுத்தார்கள், அப்படியிருக்க மற்றப் பொருள்களைக் கொடுக்க நல்லவர் யோசிக்கலாமா॥ உதவி செய்பவன் தனக்கு மேலான யோக்யன் மேலும் தொண்டனை பெறுவது தன்னைமேய, தொண்டனையளிப்பவன் மாதா பிதாவாவான்

ஸஹோதரன் இவர்களைக்காட்டிலும் மேலானவன்॥
அவன் அதிகமான பணம் கொடுத்து அதனால் கொள்வனைத்து
மற்றவர்களையும் பகவானையும் மதிக்காமல் அபமரியாதை
செய்தால் அவனை நல்லவனாகச் செய்ய பகவான் பணத்தை
ஏதாவது ஒரு வழியில் அழியச் செய்து அனுக்ரஹம் செய்வா
ர்॥ மனிதனுடைய உயர்ச்சி, அவனுடைய சக்தியல்ல
அது கெட்டது - புண்ய பாப கர்மங்களை அனுஸரித்தே லாப
நஷ்டங்கள் கொடுக்கும். அது போலவெனில் - பசுமா
ல் வாழ்வு திராய் ஒன்றே டாக நுழைகிறது, ஒரு பெட்டியில்
அன்னம் கிடைக்கிறது, மற்றொரு பெட்டியில் [illegible] கிடைக்
கிறது அது போலவே॥ பகவானுடைய பரமபக்தர்க
ள் ஸ்ரீபத்ரிபுத்ராதிகள் தனம் பாராமல், [illegible]
ல்லவ கவலையற்றவர், முனிவர்க்காதி போகங்களோ,
[illegible]த்தையும் கடவாமல் பார்ப்பவர்கள், அவர்கள் வைஷயக்
ல் பகவான் பக்தியைக் கடவிடாமல் தன்னலத்தி
ரத்தையும் பகவத்பக்தர்களுக்காகவே காரியங்களை
ச் செய்வார், அவர் பக்த பராதீனன் பக்தர்களுடைய
ஹ்ருதயத்தில் எப்பொழுதும் பகவானும், பகவானுடைய

ஏதெய்த்திஸ்பக்தனும் செய்யார்கள், பக்தனுக்கு
ச் செய்யும் அபசாரத்தைப் பகவான் பொறுக்கமாட்டார்॥
ஹரி பராதீனமான பக்தர்களுக்குச் செய்யும் கெடுதல் அ
வர்களைப் பாதிக்காமல் செய்தவனுக்கே கெடுதல் செய்யும்॥
ப்ராமணர்களுக்கு தபஸ்ஸானது இரண்டு மேன்மையை
க் கொடுக்கும் ஆனால் அடக்கமில்லாமல் கர்வமடைந்தா
ல் கெடுதலையே செய்யும்॥ பகவத்பக்தர்களானவர்
கள் சிரமம் நேர்ந்தாலும் எந்தத் தர்மத்தையும் உறுதியு
டன் செய்வார்கள், எதையும் தியாகம் செய்யத் தயங்கமா
ட்டார்கள்॥ ஒருவன் இதுவரை நல்ல காரியங்களைச் செ
ய்யவில்லையே என்று வருந்த வேண்டாம் போனது போக
டும் இனியாவது விட்டேனே இந்த உலகமெல்லா
ம் மாயையின் தோற்றம், அந்த மாயையான நாரா
யணன் ஒருவனே ஸத்யம் அவனை நான் சரணமடைகி
றேன் என்ற எண்ணம் கடைசி மரணகாலத்திலேனும் ஹ்ரு
தயத்தில் வந்தாலும் முக்தி பெறலாம், அதிக காலம் தேவை
யில்லை - ஸ்வல்பமே கட்வாங்கன் என்ற ராஜா க்ஷணகா
லத்தில் ஞானத்தால் முக்தியடைந்தார்॥

பகவானுடைய ஸ்ரீ ராமனுக்கும் ஸனத்தையாகிறதென்பார்
வையாடம்பற்றுதலிலிருந்துக்கும் நேர்த்தது, அப்
பழயதிக்க அக்ஞானியான ஸாதாரண மனிதன்ஸ்ரீ,
ஸ்ரீ முதலான விஷயங்களில் பற்றுதல் வைத்துக்கொண்டு க்
கும் கொண்டாகும் என்பது சொல்லத்தேவையில்லை ॥
ஸ்ரீ பராசையுள்ளவனுக்குப் பூமியாயுள்ள தரணியுங்கள் ஸ்வர்
ணம் பக்கங்கள் ஸ்திரீகளும் வெகும் கிடைத்து போகதிரும்
திருப்தி ஏற்படாது, அக்கினியில் வாருகெல்லாம் போடப் போடவா
ஸத்தியாவது போல் விஷயங்களை அனுபவிக்க அனுபவ
க்க மேலும் மேலும் ஆசை வளர்த்தியாகவே செய்யும்।
ஸர்வ ப்ராணிகளிடமும் அன்பு உள்ளவன் எப்பொழு
தும் ஸந்தோஷமாக வேண்டும் இருக்கையான் ॥
ஸ்ரீ ம்வயதாகி நாற்காலும் ஆசை தளர்வதில்லை, அவ
வா வெகு சிலம் தான் இல் ஸகல துக்கங்களுக்கும்
காரணமான ஆசையை எவ்விதத்திலாவது விட்டால்
தான் மனிதன் க்ஷேமத்தை அடைய முடியும் ॥
தாயார், ஸஹோதரி, பெண், யாரிடமும் ஏகாந்தமா
யாய் இருக்கக்கூடாது ஏனெனில் — விவேகமுள்ள

வனையும் கூட பல ஜன்மாந்திரங்களில் செய்த வழி
யால் கொழுந்துச் செல்லக்கூடியவை||
பகவானுடைய கதையை சொல்லும்படி கேட்பவனும் சொல்லு
பவனும் கூட இதைக் கேட்பவனும் பரிசுத்தமாவார்கள், பக
வானுடைய பாதத்திலிருந்து பிறந்த கங்கையின் பெயரைச் சொல்லு
பவனையும் ஸ்நானம் செய்பவனையும் பானம் செய்பவனை
யும் பரிசுத்தம் செய்வது போலவே|| யாருக்கும் பொழுதே
மரணம் நிச்சயம், இன்றே அல்லது நூறு வருஷங்க
ளுக்குப் பிறகோ ஏற்படலாம்|| நடப்பவன் ஒருகாலி
ன் ஊன்றிக்கொண்டே மறுகாலை எடுப்பது போலும்
புல் அட்டை முன் ஒரு புல்லைப் பற்றிக்கொண்டே
பின்னுள்ள புல்லை விடுவது போல் ஒருவன் மரண
மடையும் பொழுதே அவனுடைய கர்மாவை அனு
ஸரித்து வரப் போகும் சரீரத்தை நினைத்துக்கொண்
டே இருக்கும் சரீரத்தை விடுகிறான்|| ஒருவனுக்கு ம
ரணம் நேரிடலாம் என்று தோன்றினதும் ஜபம் பஜனக்
க முயற்சி செய்வது கடமை|| ராஜ்யத்தில் ஆசை
யுள்ள அநேக அரசர்கள், தாயாதிகளை ஸம்ஹா

மலமாகும், எரித்தால் சாம்பலாகும். இவ்வாறு சரீரத்தை மெய்யானது அழிவில்லாதது நித்யமென நினைத்து இந்த சரீரத்தை வளர்ப்பதற்காக தயவான்றி பிராணிகளைக் கொன்று தின்கிறார்கள். பிராணி ஹிம்சையால் நரகம் உண்டென்பதையும் அறியார். இந்த சரீரமே பிதா, மாதா, அன்னம் கொடுத்து வளர்ப்பவன் தன்னைக் காட்டிலும் பலசாலி, கலி அம்பாவை கொடுத்து அடிமையாக்கிக் கொண்டவன் அக்கினாய் இவை போன்றவைகளுக்கு சொந்தமென்று எண்ணுகிறார்கள். இவ்வாறும் பொதுவான தேகத்தை நான் என் என்று நினைத்து இதை வளர்க்க மாம்ஸ பக்ஷணத்திற்காக பிராணிஹிம்சை செய்பவன் பாபியாவான். இவ்வாறு மமதையால் அறிவு மழுங்கி கிடப்பதுக்கு அதிருஷ்ட தரித்திரியமே அஞ்ஞானம் (மை) ஆகும், ஏழ்மையால் கஷ்டத்தை அனுபவித்தவன், மற்ற பிராணிகளுக்கு தீங்கு செய்ய நினைக்கமாட்டான். தன் உடலில் வென்னைத்து வலியை உணர்ந்தவன் மற்றவர்களுக்கும் அதிமாத்திர துக்கம் ஏற்படும் என்று நினைத்து

37

மாட்டான். இவ் நிலைவந்தால் கர்வம், பர
ரை அவமதித்தல் முதலான துர்க்குணங்கள் ஒழி
யேபோகும், ஏழ்மை என்பது அவனுக்கு தெய்வம்
போன்றது, புஷ்டியான ஆகாரமின்மையால் இ
ந்திரியங்கள் அடங்கும். ஸாதுக்களுடன் சேர்க்
கை ஏற்படும், கெட்டவர்களுடன் சேர்க்கை வி
லகும், ஸாதுஸங்கத்தால் பகவத்பக்தி ஏற்பட்டு
ஸாத்வீகமுடையவன். பகவானுடைய குணங்க
ளைப் பேசுவதில் நாக்கும், கதைகளைக் கேட்ப
தில் காதுகளும், பூஜை செய்வதில் கைகளும்,
பாதங்களை தியானம் செய்வதில் மனமும், பகவா
ன் வாஸம் செய்யும் இடங்களை வணங்குவதில்
சிரஸ்ஸும், பகவானுடைய மூர்த்திகளையும் பக்த
ர்களையும் தெரிசனம் செய்வதில் கண்களும் ஈடு
படுவனவாகும். இதுவே பக்தியாகும். இப்பக்தியு
ள்ள மனிதனுக்கு பகவான் ஸாயுஜ்யத்தையும் ப்ரதி
சம் செய்வார்.

மேலுதால் இந்த்ரகிளிச்சந்திரன் நக்ஷத்திரங்களுக்கா

பிரகாசிக்காமல் மின்மினிப்பூச்சிகளே பிரகாசிக்கும்
அது கலியுகத்தில் வேதவைதிகர்கள் பிரகாசிக்காமல் நாஸ்திகர்களும் நாஸ்திகபாபங்களும் பிரகாசிப்பது போலுள்ளது॥ மழைகாலத்தில் வரண்ட நதிகளும் ஜலம் பெருகிக்கொண்டு கரைகடந்து நாலாபக்கங்களிலும் ஓடுவது போல் கலியால் அடக்கமில்லாத ஜனங்களுடைய உடலும் பொருள்களும் வழிதப்பிச் சென்றன கலியால் மழையின் பிரவாஹத்தால் அணைகள் உடைக்கப்பட்டன, எதுபோலவென்றில் — நாஸ்திகர்களின் சாதுரியமான நாஸ்திக பிரசாரத்தால் வேதமார்க்கங்கள் கெடுக்கப்படுவது போல்॥ சரத்காலத்தில் கருமேகங்கள் மீண்டு ஜலம் முழுவதையும் வர்ஷித்துவிட்டுப் பொழுது வெண்ணிற மேகங்களாக பிரகாசித்தன, அது — ஸகல ஆசைகளையும் துறந்து தவம்செய்து பாபங்கள் நீங்கிய முனிவர்கள் போல் உள்ளது॥ சரத்காலத்தில் மலைகளிலிருந்து சிலஸமயம் ஜலம் பெருகும் சில ஸமயம் பெருகாது, அது — ஞானிகள் சிலஸமயம் கிருபையால் உபதேசம் செய்வார்கள்

சிலவேளையம் செய்யமாட்டார்கள் என்பதுபோல

அப்பாலும் "மனுஷ்யர்களுடைய க்ஷேமத்திற்காகவே நிர்க்குணமான பரமாத்மா பகவான் அவதாரமூர்த்தியாகத் தோன்றுகிறார், அவரிடம், காமம், க்ரோதம், பயம், ஸ்நேஹம், உறவு, ஐக்யம் - அபேதம், இவைகளில் ஏதாவது ஒரு விதத்தில் பகவானிடம் இடைவிடாது மனதைச் செலுத்தினால் முக்தியடையலாம்."

பார்த்தாவுக்கு வஞ்சகமின்றி சுச்ரூஷை செய்வதே ஸ்திரீகளுக்கு மேலான தர்மம். பார்த்தாவைச் சேர்ந்தவர்களையும் குழந்தைகளையும் போஷணை செய்யவேண்டும். துர்க்குணம், துரதிர்ஷ்டம், அதிகவயது, அறிவீனம், ரோகம், தனமின்மை, இவ்வித தோஷங்களிருந்தாலும், அவனே வணங்கத்தக்கவன். பக்தியுடனிருந்தால் புண்யலோகம் கிடைக்கும். ஆனால் — கள்குடிமுதலான மகாபாபங்களிருந்தால் அவனைவிட்டு விலகலாம். ஸ்திரீகளுக்கு வ்யபசார தோஷம் ஏற்பட்டால் நரகம், இவ்வுலகில் இழிவு, ஜனங்களின் அருவருப்பு, மற்றவர்களுக்கும் பயம், இவ்விதமான

பலதேவர்கள் ஸ்திரீகளுக்கு ஸௌபாக்யத்தால் ஏ
ற்படும். ஈசுவர பகவானுடையவாக்கு॥ உலகத்தில்-பரஸ்பர
ம் உபகாரம் செய்து கொள்ளுகிறார்கள் சிலர், இந்த உபகா
ரத்தால் ஸ்நேஹமோ தர்மமோ இல்லை வியாபாரம் போன்
றது, தனக்கு உபகாரம் செய்யாதவர்களுக்கும்-மறு உப
காரத்தை எதிர்பாராமல் உபகாரம் செய்பவர்கள் சிலர், அ
வர்கள் தாய் தந்தையர்கள், குருவைப் போன்றவர்கள்.
இந்த உபகாரத்தால் தர்மமும் அன்பும் வெளியாகிறது।
தனக்கு உபகாரம் செய்தவனுக்கோ மற்றவர்களுக்கோ
உபகாரம் செய்யாதவன்-அந்தப் பிறவியில் ஞானிக
ள், உலகத்தையின்மையால் அவர்களுக்கு தர்மஸ்நே
கம் ஒன்றுமில்லை கேடுமில்லை, பகவான் பக்தானுக்ரகம்
செய்வதும் கருணையால்தான், பக்தர்களுக்கு சிலசம
யம் துன்பம் கொடுப்பதும் பக்தியை விருத்தி செய்யவே
தான்। உபகாரம் செய்தவர்களுக்கும் உபகாரம் செய்யாத
அஞ்ஞானிகளானவர்கள் நன்றி மறந்தவர்கள்,
உபகாரம் செய்தவனுக்கு அபகாரம் செய்தவர்களும் அவ்வ
ழியே, அவர்கள் மித்ரத்ரோகிகள் நரகத்தை அடைவார்கள்

பகவானுக்கும் பிரும்மக்ஞானிகளுக்கு புண்யம் பாபம்
ஸ்வர்க்கம் நரகம் என்றும் கிடையாது. ஸங்கல்பமில்லா
த அவர்களுடைய செயல்கள் மற்றவர்களுடைய பார்
வையில் புண்யமாகவோ பாபமாகவோ தோன்றலாம்
அதனால் அவர்களுக்கு ஸம்பந்தம் கிடையாது, அசுத்தத்
ஸம்பந்தத்தால் அக்னிக்கோ ஸூரியனுக்கோ
தோஷங்கள் கிடையாது அதுபோலவே, ஆனால் தபஸ்
க்ஞானம் இவ்வித சக்தி இல்லாதவன் அவர்களைப்போ
ல் ஏதாவது கொடிய காரியங்களைச் செய்தால் அழி
வுறுவான், பரமசிவன் காலகூட விஷத்தை அருந்
தினார் மற்றவன் செய்யமுடியுமா, பரசுராமன் தன்
தாயை தந்தையின் வார்த்தையால், தந்தையின் த
போபலத்தை அறிந்து வதம் செய்தார், தந்தை மறுபடியும்
தாயை உயிர்ப்பித்தார். ஆகையால் பெரியோர்களுடை
ய உபதேசத்தைக் கேட்டு அதன்படி நடக்கவேண்
டும், அவர்களுடைய நடத்தைகளில் நல்லவைகளை
மட்டும் தெரிந்து நடக்கவேண்டும்!! எல்லா நதிக
ளும் ஸமுத்ரத்தை அடைவதுபோல் எந்த தெய்வத்தை

ஆராதித்தாலும் ஸர்வதேவதா ரூபமான பகவானொ
ருவனையே அடைகிறது॥ பாசியால் மூடிய ஜலம் ஸமீபத்தி
லிருந்தும் பாசியை விலக்கி ஜலத்தை உபயோகிக்கத் தெ
ரியாமல் கானல் நீரை நோக்கி ஓடுகிறவர்கள் போல்,
ஹ்ருதயத்திலுள்ள அக்ஞானத்தால் மறைந்திருக்கு
ம் ஈசனை அக்ஞானத்தை ஞானத்தால் விலக்கி அறி
யத் தெரியாதவர்கள் வெளியிலுள்ள தேவதைகளை நோ
க்கி அலைகிறார்கள்॥ தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம், என்
ற ஸகல புருஷார்த்தங்களுக்கும் ஸாதனமான சரீரத்தை
க் கொடுத்து வளர்த்து போஷித்த தாய் தந்தையர்களைச் ச
க்தியிருந்தும், சரீரத்தால் சேவையும் பணத்தாலும் அவர்களைக்
காப்பாற்றாத புத்ரன் அவன் கொடுப்பதை ஜலமுடைய
ம் ஸ்ராத்தத்தையோ அர்ப்பணமான தர்ப்பணத்தையோ ஏற்பதில்லை அ
வனுக்கு॥ தாய் தந்தையர்கள் வயதானவர், பதிவ்ர
தையான பார்யை, சிறுவயதான புத்ரன், குரு, ப்ராம
ணன், சரணாகதியடைந்தவன் இவர்களை சக்தியுள்
ளவன் காப்பாற்ற வேண்டும், இல்லையேல் அவன் ஜீவ
னம் மரணத்திற்கு ஸமம்॥

42 + பகவானுடைய தன்மையை கண்டு
கொள்ளாது

அரணிக்கட்டையினுள் அக்கினியிருப்பதுபோல்

பரமாத்மா ஸகலபிராணிகளுடைய ஹிருதயத்தில் ப்ரகா
சிக்கிறார். அவருக்கு ஜன்மஜராரோகாதி ஷட்ப
திகிடையாது, மனிதனுக்குச் சரீரத்தில் அபிமானம்
அகங்காரம் இருப்பதுபோல் அவருக்குக் கிடையாது
அவருக்கு ஸமமானவன் மேலானவன் கீழானவன்
கிடையாது, மாதாபிதா பார்யை பெண் பிள்ளை சரீ
ரம் பந்துப் புண்யம் பாபம் முதலானவைகளும் கிடை
யாது, ஸாதுக்களை ரக்ஷிப்பதற்கு ஸ்வேச்சையா
நாடகப் போல் மாயையால் சரீரத்தை எடுத்துக்
கொள்கிறார். ஸம்ஸாரபயத்தினின்று விடுதலை
யடைய முனிவர்கள் எந்தப் பகவானைப் பூஜிக்கிறா
ர்களோ, அந்தப் பகவானிடம் கோபஸ்திரீகளுக்
கு உறுதியான பிரேமபக்தி ஏற்பட்டது, ஆகை
யால் இவர்கள் மனிதர்களில் உயர்ந்தவர்கள், பக
வானிடம் பக்தியில்லாத ப்ராமண ஜன்மம் வீணு
ம் வீணேதான். யஜ்ஞங்களை யதாவிதி செய்யு
ம் எந்த கோபஸ்திரீகளுடைய ஹரிகதையான்

காரணம் மூன்று லோகங்களையும் பரிசுத்தம் செய்கி
றதோ அந்த கோபஸ்திரீகளுடைய பாததூளியை எ
ப்பொழுதும் வணங்குகிறேன் என்று பக்த உத்தவரி
ன் வாக்கு॥ அக்ரூரர் போன்ற பாகவதோத்தமர்களி
ஷேமத்தை விரும்புபவர்கள் இன்னமேலும் அறிக்கவேண்டும்;
கங்காதி புண்யதீர்த்தங்கள், சிலா ரூபமான தேவர்கள்,
இவைகள் சிரத்தையுடன் முறைப்படி வெகுகாலம் சே
வித்தால்தான் சுத்தியேற்படும், பாகவதஉத்தமர்களை
தரிசனம் செய்து உடனேயே ஸகல பாபங்களும் நீங்
கும்॥ இவ்வுலகில் ஒருவரோடு ஒருவர் ஏககாலம்
சேர்ந்திருப்பதில் சீர நேற்றியில்லாததால், ஒவ்வொரு
வனே பிறக்கிறான் ஒவ்வொருவனே இறக்கிறான், தான் செய்த
புண்யபாப பலன்களைத் தானே தான் அனுபவிக்கிறான்
பாபம் செய்யும் மனம் பாதித்துப் போகின்ற குடும்பத்திலுள்ள
வர்கள், ஜலஜந்துக்கள் ஜலத்தைக் குடிப்பது போல அ
னுபவிக்கிறார்கள், தான் செய்த பாபம் மட்டும் தனக்
கே உரியது॥ அரிதான மனிதப்பிறவி கிடைத்து அதற்கு
ஞானமில்லாமல் விஷய கிருகத்தில் - குடும்பத்தில் கிடந்து பெருமா

ஜனபதிக் காதலன் பாஷித் தினைற்றில் வாஷிர்தப்த
வுக்கு ஸமானம்॥ தனக்கு இரிய தொழிலால் கிடைத்த
தைக் கொண்டு ஸந்தோஷத்துடன் தன் வர்ணாசி
ரம தர்மங்களை அனுஷ்டிக்கும் பார்மனுக்கு
அவனுடைய தர்மம் காமதேனுவைப் போல் ஸகல
இஷ்டங்களையும் கொடுக்கும். திருப்தியில்லாதவ
னுக்கு தேவலோகம் கிடைத்தாலும் சாந்தி ஏற்படாது
திருப்தியுள்ளவன் ஏழையாயினும் மனச்சாந்தியு
டன் ஸந்தோஷமாக இருப்பான்॥ ஸ்வதர்மானுஷ்
டானம் செய்து கொண்டு, ஸர்வ பராணிகளிடத்தி
ம் தயவுடனும் கொலையில்லாமலும் சாந்தியுடனும்
இருக்கும் க்ஞானவான்களான பராமணர்களை
நான் எப்பொழுதிலேயால் வணங்குகிறேன்
என்று பகவான் கூறுகிறார்॥ பகவான் - பிரஜைகளை
ஸந்தோஷமாக இருக்கும்படி பரிபாலனம் செய்யும் அரசன்
எனக்கு ப்ரியமானவன்॥ ஒருவனுடைய ஸுகதுக்கங்க
ளுக்கு மற்றவன் காரணமில்லை, அவனவன் செய்த
புண்ய பாபங்களுக்குத் தக்கபடி ஸுக துக்கங்களை

யைக் கொடுத்து, ஸூத்ரத்தில் பொம்மைகளை ஆட்டுவ
பதுபோல பகவான் ஆட்டுவைக்கிறார். ஆத்மா ஒன்
றே பல சரீரங்களில் பலவாகத் தோன்றுகிறது. சரீ
த்தை ஆத்மாவாக அக்ஞானத்தால் எண்ணுவதால் து
க்கம் ஏற்படுகிறது, உண்மையான ஆத்மாவை அறிந்
தால் அக்ஞானம் நீங்கி சரீர அபிமானம் போய் து
க்கங்களும் அறவே நீங்கும்॥ பகவான் – ப்ராம்மணனு
டைய ஸொத்தை கொஞ்சமாவது, பருகும் தேஜஸ்ஸம்பந்ந
வன் அபஹரித்தாலும் அவனை அக்நியைப்போல் எரித்துவி
டும், அப்படியிருக்க அரசன் அபகரித்தால் நிலைமையென்ன?
காலகூடவிஷத்தையாவது உபாயத்தால் நீக்கலாம் ப்ரா
மண ஸொத்தை அபகரித்தால் அதன் பாபத்தை நீக்க மு
டியாது। விஷம் சாப்பிட்டவனை மட்டுமே அழிக்கும் ப்ரா
மண ஸொத்தை அபகரித்தால் அவனையும் அவன் குலத்தை
யும் அழித்துவிடும்। ப்ராம்மணனை பய முறுத்தி பொருளை
அபகரித்தால் அபகரித்தவனுடைய மூன்று தலைமுறை அ
ழியும், பலாத்காரமாக அபகரித்தால் பத்து தலைமுறை
~~[illegible]~~, முன்பும் பத்துத் தலைமுறையும் தானும் அழி
வான்।

பிராமணனுடைய யோனியை அபகரித்தால் நரகம் போவோ
மென்பதை அரசர்க்கும் அறிவில்லை, தாதாவாகவும் கொ
டையாகவும் உள்ள பிராமணனுடைய யோனியை அப
ஹரிக்கும் போது அவன் அழுது கண்ணீர் எத்தனை
புழுதிகளை நனைக்குமோ அத்தனை வருஷங்கள் அரச
னும் அவனைச் சேர்ந்தவர்களும் கும்பீபாகமென்ற
நரகத்தில் துன்பத்தை அனுபவிப்பார்கள். பிராமண
னுடைய ஜீவனத்திற்காக தானஞ் செய்த சொ
த்தொத்தை அபகரித்தால் அறுபதினாயிரம் வருஷங்
கள் மலத்தில் கிருமியாக பிறப்பார்கள். பிராமணனு
டைய யோனியை அபகரித்தால் ஆயுளையும், ஐசுவ
ர்யத்தை இழந்து சர்ப்பங்களாக பிறப்பார்
கள். நிருகன் என்ற அரசன் தான் அறியாமல் ஒரு பி
ராமணனுடைய பசுவை மற்றவருக்கு தானம் செய்த
தால் அநேக வருஷங்கள் பாழுங்கிணற்றில் ஓணானாக
ப் பிறந்து கஷ்டத்தை அனுபவித்தான் என்று கூறினார்.
அடங்காத மாட்டிற்கு அடி உதவுவது போல் பணம்; பெ
லாணவைகளால் கெடும் கெண்டவர்கள் ஸ்தோத்திரத்

கைவிடப்படமாட்டார்கள், அவர்கள் ஹ்ருதயத்தில் த
ன் டோபாய ப்ரேமை பலனளிக்கும்॥ பகவான் லோகத்து
ஜங்களுக்காக வேதர்மத்தை உபதேசம் செய்யும் தா
ன் செய்யும் செய்தவர்களை உத்ஸாகப்படுத்தியும் வ
டுக்கிறார்॥ பகவானுக்கு வேண்டியவன் வேண்டாதவ
ன் என்பதில்லையாயினும் பகவானிடமும் கேட்டதைக்
கொடுப்பதைப் போல் பக்தர்கள் கேட்டதைக் கொடு
க்கிறார்॥ பொறுமையுள்ளவர்கள் எதையும் பொறு
ப்பார்கள், தார்மிகர்கள் இடமத்தைப் பாருமல் தர்மத்தை
ச் செய்வார்கள், கொடையாளிகள் எதையும் கொ
டுப்பார்கள், சரீரமோ அழியக்கூடியது என்றெண்ணுவ
க் கைக்கியாற்றும் நல்லோர்கள் புகழ்பெற அழி
யாத புகழைச் சம்பாதிக்கிறதில்லையே அவன் பெற்ற
த்துக்கவன்॥ ஸமபுத்தியுள்ளவர்களுக்கு தனக்கு
வேண்டியவன் வேண்டாதவன் என்பதில்லையாது॥
ஹரிச்சந்திரன், ரந்திதேவர், உஞ்சவ்ருத்தி ப்ராமண
ன், சக்ரவர்த்தி மகாபலி இவர்களெல்லோர், அழியாத
புகழைச் சம்பாதித்தவர்கள்॥ (சரீரம் அழிந்தாலும்)

கிருஹஸ்தாச்ரமத்திலிருந்துகொண்டு தர்மங்களைச்செ
ய்துகொண்டு நல்லபுத்ரர்களை அடைந்து பூர்வகர்மா
தால் வந்த ஸுகதுக்கங்களை பாரப்தமென்றுபொ
றுமையுடன் அனுபவித்துக்கொண்டு க்ருஹத்தில் அ
திதிபூஜை முதலின்றி ஆத்மாராமபகவத்பக்தி செய்பவ
ர்கள் கடைசியில் முக்தியடைவர்கள்|| பகவானையோ
பக்தர்களையோ ஏதேனும் நிந்தைசெய்தால், அங்கிரு
து சென்றுவிடவேண்டும், செல்லாமல் கேட்டுக்கொண்
டிருந்தால் செய்தபுண்யம் போய்நரகமும் ஏற்படும்||
வர்ணாச்ரம தர்மங்களை அனுஷ்டிப்பவர்கள் பகவானு
டைய ரூபமான இவ்வுடலைப் பெற்றே, சுத்தராகவேயே மு
க்தியடைவர்கள்|| யாகம், புத்ரன், தபஸ், ஸமாதியெ
ல்லாம தர்மங்களைக்காட்டிலும் மேலான இவ்ஸே
வையாலேயே பகவான் அதிகஸந்தோஷத்தைய
டைகிறார்| இவருடைய அனுக்ரகத்தாலேயே
மனிதன்பூர்ணமாக சாந்தியடைகிறான்|| பகவானு
க்கு பக்தியுடன் சிறிது அர்ப்பணம் செய்தாலும் பக
வான் அதைப்பெரிதாகவே ஏற்றுக்கொள்வார்|

பக்தியில்லாமல் எவ்வளவு அதிகமாகச் செய்தாலு
ம் பகவானுக்குத் திருப்தி ஏற்படாது॥ துளஸி போன்ற இலை,
தாமரை போன்ற புஷ்பம், இலந்தை போன்ற பழங்கள்,
அத்த தீர்த்தம் இவைகளில் ஏதாவதொன்றை பக்தியுடன்
பகவானுக்கு அர்ப்பணம் செய்தால் அதை அவர் ஏற்றுக்கொ
ள்கிறார்॥ பகவானுடைய பாதசேவை செய்தால், ஸர்வ
ர்க்கும் மோக்ஷம், பூலோகத்தில் ஸர்வஸம்பத்து எல்லா
வற்றையும் அடையலாம்॥ காற்று எவ்வாறு மேகங்கள், தூ
ளி பஞ்சு போன்றவைகளைச் சேர்த்தும் பிரித்தும் செய்கி
றதோ அவ்வாறே பகவானும் கர்மாவை அனுஸரித்துச்
சேர்த்தும் ப்ராணிகளைப் பிரித்தும் செய்கிறார்॥ பக்திமு
க்தியை அளிக்கும்॥ மனிதர்கள், உயர்ந்த பொருளாயி
னும் ஸம்பத்து முதலியவைகளை ஆதரிக்கமாட்டார்கள்—
கங்கைக்கரையிலுள்ளவன் வேறு தீர்த்தத்தை நாடிச்
செல்வானா॥ சாஸ்திர முறைப்படி வர்ணாச்ரம தர்மங்
களை சிரத்தையுடன் ஈச்வரார்ப்பணமாகச் செய்துவந்தா
ல் பாபங்கள் நீங்கி சித்த சுத்தி யேற்பட்டு ஞானம் வ
ரும், இது ஸுலபமான உபாயம், ஆகையால் சக்தியை

50 வித்தேஷணை, புத்ரேஷணை தாரேஷணை
லோகேஷணை

அனுஷ்டித்து, எக்ஞதானங்கள் செய்து பணஆசை
யையும், கிருஹஸ்தாசிரமத்தால் தாரபுத்ரேஷணை
ஆசையையும், ஆத்மஸாக்ஷாத்காரத்தால் புண்யலோகஏ
ஷணையையும், நாளடைவில் விடவேண்டும். மனுஜர்க
ளுக்கு மூன்று கடன்கள் — அவசியம் செய்ய வேண்டிய
வை, ரிஷிகளுக்கு வேத அத்யயனத்தாலும், பித்ரு
க்களுக்கு ஸத்புத்ரனாலும், தேவர்களுக்கு யக்ஞா
திகளாலும் தீர்க்க வேண்டும், இல்லையேல் பாபமே ||
மனிதனுக்கு ராஜ்யாதிகாரம் வந்தால் நண்பர்களையோ
பந்துக்களையோ ஏறிட்டுப் பார்க்கமாட்டான் ||
தேவர்கள், புண்யக்ஷேத்ரங்கள், தீர்த்தங்கள் இவைகள்
தரிசனம், ஸ்நானம், அர்ச்சனம் இவைகளால்
நாளடைவில் சுத்தியைக் கொடுக்கும், பெரியோர்க
ளுடைய தரிசனம் உடனேயே சுத்தியளிக்கும் ||
லோகத்திலுள்ள ப்ராணிகளுக்கெல்லாம் ப்ராம்மணன் பிறப்பி
னால் மேலானவன், அத்துடன் தபஸ் வித்யை இவை
களுடன் கூடியவன் பகவானுடைய அம்சமானவன்,
அவ்வித ப்ராம்மணன் பகவானுக்குப் ப்ரியமானவன்,

ப்ராமணன் ஸகல வேத ஸ்வரூபம், பகவான் ஸகல தேவ
ஸ்வரூபம், 'இதையறியாதவர்கள் அவர்களை அவமதிக்
கிறார்கள்,' ரிக்ஷண மோக்ஷ ஹரியை பஜித்தால். அவ
னைய ரூபத்தையடைவான்॥ தனகொர்வத்தான் ஹரியை
மறந்தவனுக்கு அனுக்ரஹம் செய்ய பகவான் நானா
வித பலவழிகளால் தனத்தை இழக்கச் செய்வார், த
னமில்லாத அவனை பந்துக்கள் விலக்கிவிடுவார்கள்,
பிறகு அவன் பொறுமையும் ஸேன பிறகு பணத்தை ஸ-
னையமாட்டு பாகவத கோஷ்டியால் சேர்ந்து பக்தனாவா
ன் பிறகு பகவான் அனுக்ரஹம் செய்வார்॥ மனமொக்
கு சரீரத்தினால் செய்யும் ஸகல கர்மாக்களையும் பக
வான் நாராயணனுக்கு அர்ப்பணம் செய்ய வேண்
டும்॥ பகவானை சரணமடைந்தவனுக்கு, பக்தி, பகவா
னுடைய அனுபவம், மற்ற உலகில் வைராக்யம் மூன்று
ம் ஸம காலத்தில் ஏற்படும், எதுபோலவெனில் — போஜன
ம் செய்பவனுக்கு ஸந்தோஷம், சரீர புஷ்டி, பசி நிவ்ரு
த்தி மூன்றும் ஒரே ஸமயத்தில் ஏற்படுவது போலவே॥
ஸர்வ ப்ராணிகளிடம் பகவானையும், பகவானிடம்

ஸகல ப்ராணிகளையும் பார்க்கும் ஞானி உத்தமபா
கவதன் | ஈச்வரனிடம் ப்ரேமையையும், பக்தர்களிடம்
ஸ்நேஹத்தையும், மூடர்களிடம் கருணையையும், சத்
ருக்களிடம் உபேக்ஷையையும் (அலக்ஷ்யம்) செய்
பவர்கள், மத்யம பாகவதர்கள் (பக்தர்கள்) | விக்ரஹ
த்திலேயே பகவானை பூஜை செய்து கொண்டு பக்தர்க
ளைப் பூஜிக்காதவன் ஆரம்ப பக்தன் || உலக வ்யவஹாரங்களை
அநுபவித்தாலும் ஸந்தோஷமோ வருத்தமோ கொ
ள்ளாமல் உலகமே மாயை என்று அறிந்து, தன்னைச்
சேர்ந்தவன், வேறானவன் என்று பேதபுத்தியில்
லாமல் ஸர்வ ப்ராணிகளிடம் ஸமபுத்தியுடைய
மான ப்ரம்மம் ஒன்றே என்று அறிந்து பரமசா
ந்தியுள்ளவன் பாகவதோத்தமன் ||
ப்ரம்மம்; உலகத்தை ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம்
செய்யக்காரணமானதும் ஸத்வரஜோதமோ கு
ணமானதும் மாயை என்பது || பக்தியுடன் கு
ருசேவை செய்து அவரிடம் பாகவத தர்மங்களைக்
கேட்டு அறிந்து அந்த தர்மங்களை ஈச்வரார்ப்பண

மோக்ஷஞ்செய்துவந்தால் மௌனமய ஸித்தியாக்கலாம்।

ஸர்வஸத்யவஸ்து நித்யமாக இருந்து உலகத்தின் ஸிருஷ்டி
ஸ்திதி ஸம்ஹாரத்திற்குக் காரணமோ, எதற்குக் கா
ரணமாயிருக்கின்றதோ ஜீவாத்மாவும் ஜகத்ஸ்வரூபம்
ஸர்வ வ்யாபி என்று மூன்று அவஸ்தைகளுக்கும் ஸாக்ஷி
யாக இருக்கிறதோ, சரீரம் இந்திரியங்கள் மனம் ப்ரா
ணன் இவைகள் எதனால் வேலை செய்கிறதோ, உள்ளும்
புறமும் நிறைந்தது எதுவோ அதுதான் பரம்
ப்ரஹ்மதத்வம் எனப்படும்॥ ரோகியானவன் ரோக
நிவர்த்தியாகி மேலும் ஸுகம் தேவைப்படாமலிருப்பதற்
காக மேனி ஔஷதத்தை ஸேவிக்கிறான் அதுபோல வேத
த்தில் ஸர்வகர்மங்களும் ஸித்தியாக வருவதற்காக வைதிக கர்
மாக்களை விதிக்கின்றது, அக்ஞானியாயிருக்கிறவன்
வைதிக கர்மாக்களைச் செய்யாமல் விட்டால் அதர்ம
த்தில் ப்ரவிருத்தி ஏற்பட்டு ஜனன மரணங்களையடை
ந்து கொண்டேயிருப்பான், வைதிக கர்மாக்களை நிஷ்
காமமாகச் செய்தால் ஈச்வரார்ப்பணமாகச் செய்
தால் மோக்ஷத்தை அடைவான், வைதிக கர்மாக்க
ளில்

பாராவித்தி செய்வதற்காக வேதகர்மாக்களுக்கு
வேறுபலன்கள் கூறப்படுகின்றன॥ பூமிபாரத்தை நி
வர்த்தி செய்ய பகவான் கிருஷ்ணனாக அவதரித்தார்.
தேவர்களாலும் முடியாத அத்புத காரியங்களைச் செய்
தார். தகாதமுறையில் எக்குற்றங்களைச் செய்பவர்களை
த்து இக்க புத்தராக அவதரித்து மாயாவாதம் செய்யப்
போகிறார். கலியுக முடிவில் துஷ்டர்களைக் கொ
ன்று தர்மஸ்தாபனம் செய்ய கல்கியாக அவதாரம்
செய்யப் போகிறார்॥ பகவான் குணங்களை அனுஸரி
த்து ப்ராம்மண க்ஷத்ரிய வைச்ய சூத்ர நாலுவர்ணத்தார்க
ளைத்தன் முகம் தோள் தொடை பாதம் இவைகளிலி
ருந்து ஸ்ருஷ்டி செய்தார். இவர்கள் தங்கள் பிதாவான
பகவானைப் பூஜிக்காமலும் அவமரியாதை செய்தாலு
ம் கீழ்நிலையடைந்து நரகத்தையடைவர்கள்॥
கலியுகத்தில் கிருஷ்ண பகவானை அறிவாளிகள் நா
மஸங்கீர்த்தனலேயே ஆராதிக்கிறார்கள்॥ கலியுக
த்தில் பகவானுடைய நாம ஸங்கீர்த்தனமேயே இங்கோ
க்தி என்பதால் பெரியோர்கள் கலியுகத்தைப்

புகழ்கிறார்கள்। ஸம்ஸாரத்தில் உழலும் மனிதர்க
ளுக்கு ஸம்ஸார பந்தம் நீங்கி சாந்தியடைய பகவ
ந்நாமஸங்கீர்த்தனமே பெரியஸாதனம்॥ கலியுகத்தில்-
சிலசில இடங்களில் பக்தர்களும், திராவிடதேசத்தில் தா
ம்ரபர்ணீ, கிருதமாலா, பயஸ்வினி (பாலாறு) காவே
ரீ மேலான நதிதீரங்களில் அதிகமாக பக்தர்கள் வா
ஸம் செய்வார்கள், அவர்கள் பகவானையே பஜித்துக்
கொண்டிருப்பார்கள், ஆசையால் பக்தியைக் கருதி, கிரு
த திரேதா த்வாபர யுகங்களிலுள்ளவர்கள் கலியுகத்தில
பாரததேசத்தில் பிறக்கவேண்டுமென்று ஆசைப்படு
கிறார்கள்॥ கெங்காஸ்நானம், கீதாபாராயணம்,
காயத்ரீஜபம், துளஸீ, கோபீசந்தனம் தரித்தல், துளா
யாமலஸாளக்ராமபூஜை, ஏகாதசீ உபவாஸவ்ரதம், பகவந்
நாமஸங்கீர்த்தனம் இத்தனையும் கலியுகத்தில் செ
ய்துவந்தால் ஸுலபமாக பகவானுடைய ப்ரஸாதத்
தால் சீக்கிரம் மோக்ஷத்தையடையலாம்॥
ஒருவன் மேன்மையடைய நற்குணங்களைத் தெரிந்
து அதன்படி நடக்கவேண்டும், நற்குணங்கள் அதிக

து கொள்ள இனிமேல் சாஸ்திராப்யாஸம் பட

டிப்பு போகாது! பஞ்சபூதங்கள் பௌதிகமான மரம்

நதி முதலியன, மற்ற பிராணிகள் இவைகளில் இருக்

கும் நல்ல தர்மங்களையும் நேரில் பார்த்து அறிந்து நற்

குணங்களை விருத்தி செய்து கொள்ள வேண்டும். உதா

ரணமாக - பூமியின் பொறுமை, வாயு ஆகாசங்க

ள் எதிலும் ஒட்டாமை, மற்றப் பொருள்களுக்கு உபகாரி

த்தல் முதலியன. நம் முயற்சியின்றியே துக்கம்

முன்வினைப்படி வருவதுபோல் விஷய ஸுகமும் ஸ்வர்க்கத்

திலும் நரகத்திலும் கிடைக்கும். ஸுகத்திற்காகவோ

ன் முயற்சி செய்ய வேண்டாம். இதனால் புண்யத்தைச் செய்

து கொண்டு நின்றால் பல ஞான ஸுகம் தானே வரும்.

தர்மங்களைச் சிரத்தாபூர்வமாகச் செய்ய வேண்டும்,

மனோஜயம் இந்திரியஜயம் பொறுமை முதலான ஸத்

குணங்களை விருத்தி செய்து கொள்ள வேண்டும். வேதாந்

த சாஸ்த்ரத்தில் அதிக பற்றுள்ளவன் கர்மாநுஷ்டான

த்தில் அதிக ஆதரவு செய்ய வேண்டாம், லௌகிக வாழ்க்கை

யில் அதிகம் பற்றுதலின்றி இருக்க வேண்டும்.

தர்மானுஷ்டானங்கள்செய்து சித்தத்தை யனுப்
து புருஷோத்தமனவதர்க்கேற்பட்டதா॥ ஸ்
வதர்மானுஷ்டானம்செய்துகொண்டிருக்கும்பக்த
ஜனபராமனான ஸம்ஸாரயோகனேமத்திர்க்கு
கஷ்டப்படும்போது அவனுக்கு உதவி செய்யவ
னுக்கு பகவான் ஆபத்துக்களைநிவாரத்திசெய்து
அனுக்ரஹம் செய்வார்॥ தீவிரவைராக்ய முள்ள
வனுக்கு ஸர்வாஸ்யூர்வமான ஞான யோகம்।
வைராக்யமில்லாதவனுக்கு கர்மயோகம்।
பகவானுடையகதா ச்ரவணம் முதலானதில்
சிரத்தையுள்ள ஸமானவைராக்யமுள்ளவ
னுக்கு பக்தியோகம்॥ எவன் திவ்யநாமஸங்கீர்
த்தனம் ஸகலபாபங்களையும் போக்குமே, எவ
னை நமஸ்காரம்செய்தால் ஸகலதுக்கங்களும்
நீங்குமோ அந்த பரமாத்மாவானஸ்ரீஹரியை ந
மஸ்காரம் செய்கிறேன்॥

ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமஸ்து।

சுபமஸ்து